# தனிப்பாநூற்பது.

---

N. M. Venkatasamy Nattar


வேலூர் காலேஜ் உதவி ஆசிரியர்

வே. முத்துஸாமி ஐயர் பி. ஏ.


இயற்றியது.




வேலூர்:

விக்டோரியா அச்சுக்கூடம்.

---

1909.

# முகவுரை.

இந்நூல், அவ்வப்பொழுது எனது மனத்தின் கண்ணே தோன்றிய கருத்துக்களையமைத்து யான் செய்திருந்த தனிச்செய்யுட்களில் நாற்பது கொண்டதாகும்; இதனை இந்நூலின்பெயரே உணர்த்தாநிற்கும். இந்நூலின் கண், இரண்டோரிடங்களில் ஒரேவிஷயத்தைக்குறிக்கும் ஒன்றற்குமேற்பட்ட பாக்கள் அமைந்துளஎனினும், மற்றை இடங்களிலெல்லாம், ஒன்றற்கொன்று சிறிதும்தொடர்பில்லாத செய்யுட்களேயிருப்பதனை, 'கமுகந்தோட்டம்' என்பது போல, மிகுதிபற்றி இது 'தனிப்பாநாற்பது' எனப்பட்டது.

இந்நூலுள் சிலசெய்யுட்களில், இப்போது எனக்குத் தோன்றிய சில சிறுமாறுதல்கள் செய்திருக்கின்றேன். ஆயினும் அவற்றின் பொருளைச் சிறிதும் மாற்றவில்லை. தமிழ்ப்பயிற்சி மேலீட்டால் எழாது, தமிழார்வ மேலீட்டால் எழுந்த இச்சிறுநூலை, எனதுநண்பர் சிலருடைய விருப்பத்திற்கிணங்கி வெளியிடலானேன்.

இச்செய்யுட்களிற் பெரும்பாலன, யான் கலாசாலை மாணாக்கனாயிருந்தபோது செய்யப்பட்டனஆகலானும், அவற்றைப் பெரும்பாலும் இருந்தனஇருந்தவாறே வெளிப்படுத்தியுள்ளேன் ஆகலானும், இந்நூலின்கண் குறைபாடுகள் காணப்படலாம்: அன்றியும், சிலஇடங்களில், சில சிறுமாறுதல்செய்தால், சொன்னயம் பொருணயம் சிறக்குமென்று அறிஞர்சிலர்க்குத் தோன்றலாம். அங்ஙனம்தோன்றுழி, அவர்கள் தயைசெய்து அத்திருத்தங்களை எனக்குத் தெரிவித்தால், யான் அவர்கட்கு நன்றிசெலுத்தச் சித்தனாயிருக்கின்றேன்.

இதனை அச்சிட்டு வெளிப்படுத்தும் விஷயத்தில் எனக்கு வேண்டியவுதவி புரிந்த எனது அரிய நண்பர் ஸ்ரீமான் பு. க. ஸ்ரீநிவாஸாசாரியர் அவர்கட்கு யான் பெரிதும் கடமைப்பட்டிருக்கின்றேன்.

வேலூர். }
4—5—09. }

இங்ஙனம்,
நூலாசிரியன்.

---

## உரிமையுரை.

[தம்முடன் இளமைதொட்டே கல்வி பயின்றவரும் தமது ஆருயிர்போன்ற நண்பருமாகிய ஸ்ரீயான் ரா. சங்கரையர் அவர்களுக்கு, தாம் இச்சிறுநூலை உரிமைசேர்க்க விரும்பியபோழ்து பாடியது:—]

### பஃறொடை வெண்பா.

ஆங்கிலங் கற்போர் அருந்தமிழை யோதாது
நீங்கிலவர் செய்கடனில் நீங்கியவ தொன்றுரைத்தென்
உள்ளத்தி லெஞ்ஞான்றும் ஊக்கங் கிளர்ந்தோங்கத்
தெள்ளமிழ்திற் பல்நிருபம் செந்தமிழிற் றீட்டிமிக்க
மேதகவுற் றென்னுடலின் மேவுமுயிர்போல்வான்
தீதகன்ற செம்மனத்தன் சீராருஞ் சங்கரநற்
பேர்க்குரிசிற் கல்லாது பெட்புடன் இந்நூலை
யார்க்குரித்தாச் சேர்க்கிற்பேன் யான்.

---

# தனிப்பா நாற்பது.

---

[1904—ஆம் ஆண்டில், தாம் திரிசிரபுரம் எஸ். பி. ஜி. கலாசாலையிற் கல்விபயின்றபோழ்து அந்நகர்ச சிறப்பைக் குறித்துப் பாடியது :—]

நேரிசை வெண்பா.

1 நீர்வளத்தால் நெல்வளத்தால் நீள்கலையின் பல்வளத்தாற்
சீர்வளர்ப்ப தாகுஞ் சிரபுரத்தைப்— பார்மடந்தை
அம்பொன் னுதலி லணிபெறத் தீட்டியதோர்
செம்பொற் றிலகமெனச் செப்பு. (க)

[1904—ஆம் ஆண்டில் தாம். தமிழ்நாட்டு மகளிர்பலரும் படித்துவரும் பாமரரஞ்சக நூலாகிய "ருக்மணி கல்யாணம்" என்பதைப் பார்த்தபோழ்து, கண்ணபிரான், தம்பால் தூது வந்த வேதியன் சொற்கேட்டவுடன் தேரூர்ந்து, உருக்குமணியிருக்குமிடம் நோக்கி விரைந்துபோந்த அருட்செயலை வியந்து பாடியது:—]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

2. மூவுல காதி யாவு முறைமுறை புரக்கு முன்னோன்
தாவறு காதல் கொண்டு தமனிய முருக்கி வார்த்த
பாவையே போல்வா ணெஞ்சிற் பத்தியை வியந்தன்
(ணட்கு
மேவருள் புரிதலெண்ணி மேவினன் செம்பொற் றேர்
(மேல்,

### கலிவிருத்தம்.

3\. அயலெலா மானிட ரார்த்து நிற்பவும்
புயலுறு விசும்பிடைச் சுரர்கள் போற்றவும்
கயல்பொரு கண்ணியைக் கண்ணன் றன்மனத்
தியல்பெழுங் காதலில் இருத்தி யேகினன். (ங)

[1905—ஆம் ஆண்டில், தம்நண்பரொருவர், "நைடதநூலின் முதலேழுபடலங்களின் பெயரும் முறையேவர ஓர் வெண்பாவரை க" என வேண்டியபோழ்து பாடியது:—]

### நேரிசை வெண்பா.

4\. நாட்டு வளமு நகர்வளமு மன்னத்தைத்
தோட்டத்திற் கண்ணுற்றுத் தூதாக—வோட்டியதுங்
கேட்டணங்கு* கைக்கிளையாற் †கேதமுற மாலைநிலா
நீட்டித்து நின்றதுவுந் தான்.

முதலேழ் படலங்களாவன:—1 நாட்டுப்படலம்; 2 நகர்ப்படலம்; 3 அன்னத்தைக் கண்ணுற்ற படலம்; 4. அன்னத்தைத் தூதுவிட்டபடலம்; 5. கைக்கிளைப்படலம்; 6. மாலைப்படலம்; 7. நிலாத்தோற்று படலம். *அணங்கு ஈண்டு உவமையாகுபெயராய், அணங்கு [தெய்வப்பெண்] போல்வாளாகிய தமயந்தியைக் குறிக்கும். †கேதம்-துன்பம். (ச)

[1905—ஆம் ஆண்டில், தம்மூரையடுத்த இளங்காடென்னும் கிராமத்துப் பள்ளியிற்கற்கும் பிள்ளைகளனைவரும் "உலகெலாமுணர்ந் தோதற்கரியவன்" என்று தொடங்கும் பெரியபுராணக் கடவுள்வணக்கச்செய்யுளைப் பாடியபோழ்து அவ்விருத்தத்தின் இயக்கத்தில் ஈடுபட்டுத் தாமும் அவ்வாறு சிவபெருமானைக்குறித்துப் பாடியது:—]

கலி விருத்தம்.

5. இலங்கு வெண்மதி யேந்துநு தலினன்
*சலங்கொள் கங்கைச்ச டைமுடி நாயகன்
துலங்கு மெய்யுமை துன்னிய மேனியன்
நலங்கொள் தாளிணை நாடிப்பி றைஞ்சுவாம்.

*சலம்—கோபம், நீர் என்பதுமாம். (ரு)

[1906—ஆம் ஆண்டில் தமக்கு இராஜதானிக் கலாசாலையில் தமிழாசிரியராகிய ப்ரஹ்மஸ்ரீ உ. வே, சாமிநாதையரவர்களுக்குத் துரைத்தனத்தார் "மஹாமஹோபாத்தியாயர்" என்ற அரிய பட்டத்தை அளித்தபோழ்து தாம் உள்ளமுவந்து பாடியது:—]

நேரிசை வெண்பா.

6. இற்றைத் தமிழ்ச்சீர் இவர்ச்சார்ந்தே யோங்குவதைச்
சற்றும் மறவார் தமிழ்வாணர்—மற்றிவரான்
முக்காப் பியங்களொடு முன்னரிய* நூல்பலவும்
புக்கீண் டொளிர்கின்ற போழ்து.

*முன்னரிய-நினைத்தற்கரிய என்றும், (அச்சாவதற்கு) முன் அருகியிருந்த என்றும் இருபொருள் பயக்கும். முக்காப்பியங்கள்—சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை என்பவை. பிறநூல்கள்-புறநானூறு, புறப்பொருள்வெண்பாமாலை, ஐங்குறுநூறு முதலியன (சு)

நேரிசைவெண்பா.

7. செய்ய தமிழ்ச்சுவையைத் தேர்ந்துணரா வாங்கிலரும்
அய்யர்க் குகந்தே யளித்தனரால்—வையகத்துள்
"மாமோபாத் யாய"ரெனும் வான்பட்ட மற்றிவர்சீர்
யாமோதற் பாலதோ ரீண்டு. (எ)

[ஜான் கீட்ஸ் (John Keats) என்னும் ஆங்கிலப்புலவரது அரிய வாக்கென ஆன்றோரால் போற்றப்பெற்றதும், அப்பாஷையில் ஓர் பழமொழிபோற் கற்றோராலும் மற்றோராலும் வழங்கப்பெற்று வருவதுமாகிய "A thing of beauty is a joy for ever" என்ற வாக்கியத்தின் கருத்து அமையுமாறு, 1907—ஆம் ஆண்டில் பாடியது:—]

8. எழிலுடைப் பொருள்க ளெக்கா லத்தும்
விழுமிய வின்பம் விளைக்கு மென்ப. (அ)

[1907—ஆம் ஆண்டில் தமது அரும்பெறல் நண்பர் ஒருவர், தமக்குத் (நண்பர்க்கு) தமிழாசிரியரும், திரிசிரபுரம் ஸெயின்ட் ஜோஸெப் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதரும் ஆகிய **ஸ்ரீமான் சவரிராயப்பிள்ளையவர்களை** (*M. R. A. S.*) விட்டுத் தாமும் தம்முடன்கல்விபயின்ற பிற மாணவர்களும் வருஷமுடிவிற் பிரிந்துசெல்வதற்கு முன்னர் "ஆசிரியரது பிரிவாற்றாது மனமழுங்கும் எமது நிலைமையை விளக்கி, அவ்வாசானை முன்னிலைப் படுத்தி ஓர்செய்யுள்வரைக" என வேண்டியதற்கு இசைந்து பாடியது :—]

### நேரிசை யாசிரியப்பா.

9. மணிகொள் வான்கடல் மன்னிய வாடையா
அணிகொள் கின்ற அம்புவி மடந்தையின்
வாண்முகம் போலுநம் மாண்புசால் நாட்டுள்
காண்டகு பொலிவுகூர் காவிரி மருங்காம்
சிலைநுத லதனிற் சிறக்கத் தீட்டிய
விலையிலாத் திலத விளக்கமேய்க்கும்
திரிசிர புரமெனுந் திருந்திய நகரில்
தந்நலந் துறந்து தம்மதக் கோளை
நன்னர் விளக்கி நல்லறி வுச்சுடர்

கொளுத்துவான் முயலுங் குழுவின ராகும்
பாதிரி மார்தமால் யாதிதற் கிணையெனக்
கண்டா ரனைவருங் கருத்து வியக்குமாறு
அமைக்கப் பெற்றவிவ் வருங்கல் லூரியிற்
புறவிருள் நீக்கும் புரையறு பரிதியின்
அகவிருள் நீக்குந் தகவுடைப் புலவீர்!
வள்ளுவர் குறளி னுள்ளுறை பொருளும்
கற்பனைச் சோர்நற் களஞ்சிய மெனத்தகும்
கம்பர்தங் கவிகளிற் செம்பொருட் பொலிவும்
சங்கம் மரீஇய தங்க நான் மாண்பும்
எங்கட் கியம்பிய இன்றமிழ்ச் செல்வீர்!
ஆங்கிலங் கற்றுமற் றதன்றுணை மேற்கொண்
டோங்கிநம் புகழ்படைத் தொளிர்தமிழ் மொழியை
மேக்குற வளர்க்குமா றாக்கமோ டுழைக்கும்
ஒருதனிச் செம்மால்! உயர்தவா சிரியீர்!
எங்கண் மனத்து வியங்குசிற் றறிவாம்
பைங்கூழ் முதலைப் பரிவுடன் வளர்த்துங்
கைம்மா றியாதுங் கருதா முகிலே!
எவ்வகைக் கொடையினும் ஏற்றஞ் சான்ற
எவ்வமே யில்லா இயற்றமிழ்க் கொடையை
இன்பமோ டளிக்கு மியல்புசால் வள்ளால்!
* நூலா ராய்ச்சிசெய் நுண்ணிய மதியீர்!
** மொழிநூற் பயிற்சியும் ஒழியா தோம்புவீர்!
அன்பும் பொறையும் ஆர்ந்து விளங்குவீர்!
இத்தகை நமக்கியாம் இயற்றுங் கைம்மாறு
எத்தகைத் தாகு? மற் றென்செய வல்லேம்?
† "பிரிவெனு மழல்" சுடப் பெரிதழுங் கும்யாம்

---

* நூலாராய்ச்சி—Literary criticism.
** மொழிநூற்பயிற்சி—The study of comparative philology.
† நைடதம்.

உள்ளநெக் குருகி யுறுசெய லற்றுத்
தள்ளவொண் ணாத்துயர் தாங்கிட வல்லமோ?
ஆயினு முணர்ந்தே முலக வியற்கையை.
நன்மையுந் தீமையு நனிவிராய் நிற்றலை
ஓர்ந்தனெம் யாங்கள். ஒருவா றகத்
தேர்ந்தனெஞ் சிந்தை. தெள்ளிதின் நீவிர்
நன்கு புகட்டிய நன்மதி யோம்பி
அறிவு முதிர்ந்தே யருளுடை யேமாய்
நற்றமி ழணங்கை நாளும் போற்றியும்
*"அவளிசைத் தேறல் செவிவாய்ப் பருகியும்"
அன்னவட் கேவல் புரியுமா று
அருந்தமி ழண்ணலே! ஆசிகூ றுகவே. (௬)

[1907-ஆம் ஆண்டில், தாம், "ஆல காலவி ஷத்தையு நம்பலாம்;
ஆற்றை யும்பெருங் காற்றையு நம்பலாம்;
கோல மாமத யானையை நம்பலாம்; கொல்லும் வேங்கைப்பு லியையு நம்பலாம்;
காலனார்விடு தூதனை நம்பலாம்; கள்ளர் வேடர்ம றவரை நம்பலாம்;
சேலை கட்டிய மாதரை நம்பினால் தெருவில் நின்று தியங்கித் திரிவரே"

என்ற தனிப்பாடலைச் சிந்தித்த போழ்து ஈற்றடியில் "மாதரை" என்ற சொற்குஅடையாய் நிற்கும் "சேலைகட்டிய" என்னுந் தொடர் ஆற்ற லிலதாதலோடு, ஒருவாறு இழிசினர்வழக்குப் போன்றும் தொனித்தலானும், உலகவாழ்க்கையில் ஆடவர்க்குப் பல்லாற்றானும் உடனிருந்து உதவிபுரிந்துவரும் மாதரை, பொதுவாக இங்ஙனம் கடிவது சிறவாது என்று தமக்குத் தோற்றியமையானும், தாம் அவ்வீற்றடியை மாற்றிப் பாடியது:—]

* காலஞ்சென்ற ப்ரஹ்மஸ்ரீ வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் அவர்கள் B.A. இயற்றிய "பாவலர்விருந்து."

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

10. "ஆலகால விஷத்தையு நம்பலாம் ஆற்றை யும்பெருங்
காற்றையு நம்பலாம்.
..........................................................
.........................................................."
நீல வேல்விழி வேசையை நம்பினல் நிலைக லங்கிய
லைவர்தெருவிலே. (ய)

[1907—ஆம்ஆண்டில்நிகழ்ந்த மதுரைத்தமிழ்ச்சங்கத்து பி. எ.
பரீட்சை வினக்களில் ஒன்ருகிய "பாட்டுக் கிசைந்த பதந்தொடுப்
பார்தமிழ்ப் பாவலரே" என்பதைஈற்றடியாகவைத்து ஓர்செய்யுள்
வரைக'என்பதனைத் தாம் பார்த்த போழ்து பாடியது:—]

கட்டளைக் கலித்துறை.

11. நாட்டுக் கிசைந்த நலம்பல நாடி நயம்புரிந்து
வேட்டற் கிசைந்த புகழ்மலி யுந்தமிழ் வேந்தர்போற்றச்
சூட்டற் கிசைந்த மலர்கொண்டு மாலை தொடுப்பதுபோற்
"பாட்டுக் கிசைந்த பதந்தொடுப் பார்தமிழ்ப் பாவலரே."

தமிழ்ப்பாவலர் தமிழ்வேந்தர் போற்ற, சூட்டுக்கிசைந்த நறு மலராற் பூமாலை தொடுப்பதுபோற் பாட்டுக்கிசைந்த பதங்களைத் தொடுப்பர் என்பது முடிபு. (கக)

[1908—ஆம் ஆண்டில், தம்மூர்க்கு அணித்தான இளங்காடு என்னும் ஊரில் ஸ்தாபிக்கப்பெற்றுள்ள 'நற்றமிழ்ச்சங்க'த்தின் வருஷோற்சவ தினத்து அக்கிராஸநாதிபதியாக வந்துற்ற சோழ வந்தான் மகாவித்துவானும், தொல்காப்பியம் திருக்குறள் ஆகிய நூல்களில் மிகவும் அரியபயிற்சி யுடையாரதலோடு, அவ்வரிய நூல்களையும் அவற்றின் உரைகளையும் பல்காலும் நுணுகி

ஆய்ந்தவரும் ஆகிய ஸ்ரீமான் அ. சண்முகம்பிள்ளையவர்களுக்கு இச் சங்கத்தின் அங்கத்தினருள் ஒருவராகிய தாம் நல்வரவு கூறி உபசரித்தபோது பாடியன:—]

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

12. சீர்பூத்த திருமறைகள் சென்றெங்குந் தேடியுந்தாந்
தெரியக் காணாக்,
*கார்பூத்த மிடற்றோனுங் கலைக்கூட்டுணும் விழைவாற்
கழகஞ் சார்ந்தே,
ஏர்பூத்த விளங்கதிரின் றீஞ்சுவையை நனிநுகர்ந்தே
யிறைய னாய்ப்,
பேர்பூத்துப் பிறங்கியநற் பாண்டியனா நாட்டிற்கோர்
பெருமை நாட்டி,

*கார்பூத்த மிடற்றோன் — நீலகண்டன் என்றபடி. (கஉ)

13. நீர்வளத்தால் யாம்வதியுஞ் சோணாட்டைப் புறங்கண்டு
நிகரில் கல்விச்,
சீர்வளத்தா லெவ்வூர்க்குஞ் சிறிதேனுந் தாழாநற்
சிறப்பு வாய்ந்தே*
ஆர்வளத்தாலணிபெறுசீர்த் தார்வளவன்† மற்றிதற்கெவ்
வாற்றி னானும்,
நேர்வளத்த தொன்றிலதென் றுவந்திடுமச்செழும்பதிமேல்‡
நிலவத் தோன்றி,

*வாய்ந்து—வாய்ந்ததனால் எச்சத்திரிபு. † ஆத்திமலரின் வளத்தால் அழகு பெறும் சிறந்த மாலையை யணிந்த சோழன்; சோழனும் உவந்த ஊர் சோழனுவந்தான் என்பது சோழவந்தானென மருவியது என்று கொண்டு கற்பனை முகத்தால் ஊர்க்குப் பெயர்க் காரணம் கூறியபடி. ‡ மேல்நிலவ—மேன்மேலும் நிலவுதற்காக. (கங)

14. "எந்நாளுங் காப்பா"*ரென்றிசைமொழியைக்கவியரசா யிலங்குங் கம்பர்,
அந்நாளி லிசைத்திட்ட வலகில்புகழ் வேளாளர் அருஞ்சீர் மேன்மேற்,
பன்னாளும் பாவினிலை பெறல்வேண்டிச் செவ்வேளே பாரின் மீது,
இந்நாளி லியற்பெயரோர்† டவதரித்தா னெனப்பலரு மியம்பா நிற்ப,

*'செட்டிமக்கள் வாயில்வழிச் செல்லோமே............
.................. ................................ ......
......... .................................. ..எந்நாளுங்
காப்பாரே வேளாளர் காண்"என்பது—கம்பர் தனிப் பாடல். †இயற்பெயர்—சண்முகன் என்பது. (கச)

15. நூற்றுறையில் நனிபயின்று நுண்மதியா லாசிரியர் நுவன்றவெல்லாம்,
ஏற்றுப்பின் ஞானவெம் போல்வார்க் கியற்றமிழின் இனிமை* காட்டி,
ஊற்றெழுந்த தமிழார்வ முளநிரம்பி வழிந்திடலா லுகந்து பல்லோர்,
போற்றிடவே மதுரையினிற்புதுச்சங்கத்தமர்ந்தபிரான்! பொலிக வீங்கே

*தமிழே இனிமை என்பது தொனிக்கும். வழிந்திடலால் அமர்ந்த என்பது முடிபு. (கரு)

16. சொல்லரியதிருக்குறளுஞ்சீர்த்ததொல்காப்பியமுமெனுந் தூய நூல்கள்,
பல்லறிஞ ருரைவழியே பயின்றனரிங் குனைப்போலப் பார்க்கில் யாரே,

நல்லறிவா லாய்ந்துபல நவவுரைகள் நவையின்றி
நவில கிற்பார்?
புல்லறிஞ ராமடமையுந் தேற்றிடவே யருள்கொண்ட
புலவ ரேறே! (கசு)

17. செந்தமிழ்க்கேயுழைத்துவந்து*சிறிதேனும்பொருளைச
சிந்தி யாது,
நந்தலிலா வின்பமொன்றே நனிபயக்கு நூற்பொருளை
நாடி நின்று,
சந்ததமு மோய்வின்றித் தமிழணங்கின் பணியாற்றித்
தளர்வு றுத,
சந்தமுறு சண்முகப்பேர்த் தனிப்புலவ! நீயினிது
சார்க விங்கே.

*உழைத்து உவந்து எனவும், உழைத்து வந்து எனவும் இரு பொருள் பயக்கும். (கஎ)

18. நின்னரிய குணங்களையே நிகழ்த்துதுமோ! நிகரின்றி
நீதான் சொற்ற,
உன்னரிய சித்ரகவிச் சீர்*தனையே செப்புவமோ!
ஒன்ன லாரைப்,
பன்னரிய தருக்கத்தால் நீமறுக்கு மாற்றலினைப்
பகர்கிற் பேமோ!
இன்னமுதப் பிரசங்கத் தின்சுவையை வழுத்துவமோ!
என்செய் கிற்பேம்?

*நினைக்கவும் அரியவாகிய 'மாலை மாற்றுமாலை', 'ஏகபாதநூற் றந்தாதி' என்னும் சித்ரகவி நூல்களின் சிறப்பு. (கஅ)

19. இத்தகைச்சீர் வாய்ந்திடுநீ யெம்முடையீர்! விண்டுதனுக்
கிசைந்திங் குற்றாய்,
எத்தகைய கைம்மாறியா மியற்றுவோம்! எம்முகங்க
ணோகி யுற்ற,
இத்தினத்தை நற்றினமா நினைந்தேயா மனைவேமு
மின்பு கூர்ந்தே,
எத்தலத்தும் புகழ்சான்ற புலவர்சிகா மணி!நின்வர
வேற்போம் யாமே. (௧௯)

[1908-ஆம் ஆண்டில் தாம் விநாயக சதுர்த்தியன்று வேலூர்க்கு அணித்தான சேண்பாக்கம் என்னும் ஸ்தலத்திலுள்ள செல்வ விநாயகக்கடவுளைத் தரிசித்தபோழ்து பாடியது:—]

நேரிசை வெண்பா.

20. நல்வினைகட் கூறுபல நாடிவரும் போழ்தத்தவ்
வல்வினையை* வாட்டு மதக்களிறே!—தொல்பதியாம்
சேண்பாக்கஞ் சேர்ந்துறையுஞ்செல்வா! என் கோண்மனத்தை
மாண்பாக்கக் கொள்வாய் மனம்†

*'அவ்வல்வினை' என்றது மேற்குறித்த ஊறுபலவற்றை. முதலிரண்டடிகளில் 'விக்நேச்வரன்' என்னும் பெயரினது பொருளை விளக்கியவாறு. †'கொள்வாய் மனம்'—மனங்கொள்வாய் என மாற்றி, 'அருள்செய்' என்று பொருள் கொள்ளல் வேண்டும்; மனத்தை மாண்பு ஆக்க, மனத்தைக்கொள் என்றபொருள்தொனிக்கக் கூறியது ஒருவகைத் தொடர் நயம்பற்றி. (௨௰)

[ஷை விநாயகசதுர்த்தி யன்றிரவு தாம், வேலூரிலுள்ள "திருநாவுக்கரசுமட"த்தில் நடந்த சிவபுராணப்பிரசங்கத்தைக் கேட்கச் சென்றுழிப் பாடியது.—]

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

21. பூவினுக் கரசர் பூண்ட புகழினைப் புறத்தே யோட்டும்
பாவினுக் கரசர் பல்லோர் பல்லியல் நூல்கள் யாத்தார்
*தேவினைக் குறித்தே பாக்கள் தேனினு மினிய சொற்ற
நாவினுக் கரசின்† யாரே நவிலருந் தூய்மை வாய்ந்தார்.

* 'தேவினுக் குகந்த வாரம் செவ்விதிற் புனைந்து சாத்தும்' என்பதும் பாடம். தேவினுக் குகந்த வாரம்—தேவாரம்; † நாவினுக்கரசின், இன்-ஐந்தாம் வேற்றுமை; எல்லைப்பொருள். (உக)

[1908-ஆம் ஆண்டில், இங்கிலீஷ் அறிஞர் பலர், இராஜத்துவேஷமென்னும் குற்றஞ் சாற்றலுற்று, நினைக்கவுமரிய கொடுந்தண்டனை யடைந்தபோழ்து, தம் நாட்டின் நிலைமைக்கு மிகவும் இரங்கிப் பாடியது:—]

### கலிவிருத்தம்.

22. கோதறு நிதிதவக் கொடுத்துந் தக்கதோர்
ஆதர வின்றியுள் ளழுங்கு மெங்களை
நீதியஞ் செல்வியே! நீயுங் கைவிடில்
யாதினி யெமக்கரண்? யாமென் செய்குவேம்? (உஉ)

[1908-ஆம் ஆண்டில், தாம் ஸரஸ்வதிபூஜையன்று நாமகளைக் குறித்துப் பாடியன:—]

### நேரிசை வெண்பா.

23. நன்று மியற்றுமிழை நற்கரத்து நூல்காட்ட
என்று மிசைத்தமிழை யாழ்காட்டக்—குன்றுச்சீர்
நாடகத்தை மேனி நலங்காட்டு நாவணங்கைக்
கூடற் றமிழணங்காக் கொள்.

தமிழ்த்தெய்வம், இயல் இசை நாடகம் என்னும் மூவகைப் பாகுபாடுடையள்; உற்றுநோக்கின், கலைமகளும் மேற்காட்டிய வாறு இம்மூன்றனையும்இயையுடையள்; ஆகலின் நாமடந்தையைத் தமிழ்த்தெய்வமடந்தையெனத் தற்குறிப்பேற்றிக் கூறியபடி. (உ௩)

நேரிசை வெண்பா.

24. சொன்னயமும் ஒண்பொருளின் தூநயமு மற்றுமுள
பன்னயமு மார்ந்திலங்கும் பாக்களெனும்—இன்னிசை*சேர்
நல்லரங்கி னாடு நடிக்குங் கலைமயில்! நின்
நல்லருளே நாடுகிற்பேன் நன்கு.

*இசை—கீர்த்தியென்றும், இராகமென்றுங்கொள்ளலாம் (உ௪)

[1908—ஆம் ஆண்டில், தமது ஆருயிரன்பருள் ஒருவராகிய ஸ்ரீமான் ரா. சங்கரையர் என்பவர்க்கு ஆண்மகவு பிறந்தவிஷயங் கேட்டு, அன்னார்க்கு அன்றே போக்கிய நிருபத்தில் வரைந்தன:—]

நேரிசை வெண்பா.

25. நட்புக் கனிகலமாம் நற்சங் கரர்பயந்த
தட்பவமிழ் தொக்குந் தமிழ்*மகவே!—ஒட்பஞ்சால்
திங்களணி சங்கரன்சேய் செவ்வேள்போற் சீர்மலிந்தே
இங்கொளிர்க நீதான் இனிது.

*தமிழ்—இனிமையெனவும் பொருள் கொள்ளலாம். ‘சங்கரர் பயந்த தமிழ்’ என்பதில் சிவபிரான் அகத்தியர்க்குத் தமிழுரைத் தருளினர் என்னும் ஐதிகவிஷயம் தொனிக்கும். (உ௫)

நேரிசை வெண்பா.

26. நின்னரிய பெற்றோர்தம் நெஞ்சகத்து நாடோறும்
மன்னியொளிர் காதல் வளர்தல்போல்—உன்னிநன் னூல்
ஓதுவோர்க்கின்பமுளத் தோங்குதல்போலொண்மகவே!
நீதின்றி யோங்குகநின் சீர். (உ௬)

[1908—ஆம் ஆண்டில், தாம் தமது அரும்பெறல் நண்பர் ஒருவரோடு இல்லற இன்பத்தைக் குறித்து உரையாடிய காலத்து அன்னார், "தீநெறிப்படாது இன்பம் நுகர்தலிற் புரைகாண்டற்கு இயலாது" என்று கூறித் தமது கருத்தோடு ஒருப்பட்ட போழ்து பாடியது:—]

### நேரிசை வெண்பா.

27. சிற்றின்பஞ்* செந்நெறித்தேற் சீர்ப்பிக்க பேரின்பம்†
மற்றின்பமீண்டிதன்முன் மாண்பிலவாம்—தெற்றெனவே
சிற்றம் பலமென்று செவ்வியபே ரம்பலத்தைக்
கற்றோர் வழங்கல் கரி.

*சிற்றின்பம்—என்பதற்கு ஈண்டு இல்லறவின்பம் (Domestic bliss) என்று பரந்தபொருள் கொள்ளல்வேண்டும். †பேரின்பம்—பெயர்ப்பயனிலை. (உஎ)

[1908-ஆம் ஆண்டில், தாம் கம்பராமாயணச் செய்யுள் பலவற்றுள் ஈடுபட்டு உள்ளமுவந்தபோழ்து பாடியது:—]

### கலி விருத்தம்.

28. எம்பிரான் காதையிற் கியைந்த மாண்பிற்றாய்
இம்பர்வாழ் மானிடர்க் கினிய*வூறலாய்
உம்பர்தெள் ளமுதையு முவமை யேற்கலாக்
கம்பர்தங் கவித்தடங் களிப்பி னாடுகேம்.†

*இனிய—குறிப்புப் பெயரெச்சம்; குறிப்பு வினையாலணையும் பெயர் எனினும் அமையும். †ஆடுகேம் நாடுகேம் என இருவகையாகவும் பிரிக்கலாம். (உஅ)

[1908—ஆம் ஆண்டில், பள்ளிக்கூடத்து மாணாக்கர்களுள் அறிவு ஒழுக்கம் முதலியவற்றில் தாழ்ந்த சிலர், தங்களுருவத்தைப் படத்தில் அமைத்துக் கொள்ள வந்தபோழ்து, பட்டாடை முதலிய தரித்துக்கொண்டு, பெருவகையெய்தி நின்றதைத் தாம் பார்த்துப் பாடியது:—]

## நேரிசை வெண்பா.

29. நிறத்தழகு வாய்ந்து நிலவுமுடை யாதி
புறத்தழகு தான்காட்டும் போட்டோ*—புறத்தோர்க்கு
அகத்தழகு காட்டும் அரியவொழுக் கத்தை
மிகத்தழுவு வீரே விழைந்து.

*போட்டோ—உருவப்படம் (Photograph) என்னும் பொருளில் வரும் மேனாட்டுத் திசைச்சொல். உலகவழக்கிற் பெரிதும் பயிலப்பெறுவது. (உகூ)

[1908—ஆம் ஆண்டில், தமது அரும்பெறல் நண்பராகிய வேலூர்க் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான் பு. க. ஸ்ரீநிவாஸா சாரியாரவர்கள், தமது அன்பு அடிதொறுந்தோன்றுமாறு, முழுதுஞ் செய்யுளானியன்ற திருமுகம் ஒன்று போக்கிய போழ்து, தாம் பதில் வரைந்தது:—]

## நேரிசை வெண்பா.

30. பூமணமும்பொன்னிற்பொருந்தொளியும்பொற்புறுநற்
பாமணமுமென்றுரைக்கும்பான்மைத்தே—நாமணக்கும்
பாக்கள் பலவுரைக்கும் பாவலிர்! நும் பாலென்றன்
நீக்கமறும் அன்பின் நிலை. (௩0)

[1909—ஆம் ஆண்டில், தாமழையடுத்த இலங்காட்டில் ஸ்தாபிக்கப்பெற்றுள்ள "நற்றமிழ்ச்சங்க"த்தின் தைமீத்துக் கூட்டத்திற்கு வேலூர்க் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர், ஸ்ரீமான் பு. க. ஸ்ரீநிவாஸாசாரியர் அவர்கள் அக்கிராஸநாதிபதியாய் வந்துற்ற ஞான்று, அச் சங்கத்தின் அங்கத்தினருள் ஒருவராகிய தாம், அன்னாரது நல்வரவினைக்குறித்துப் பாடியது:—]

நேரிசை யாசிரியப்பா.

31. ஆன்றோ ரேத்து மரும்புக ழௌவை
"சான்றோ ருடைத்"*தெனச் சாற்றிய நன்றியும்
சதக நூ லாருநன்† சாலவும் விளக்கி
இதற்கிணை நாடிங் கிலதென் றுரைத்த
அற்றை மாண்போ டிற்றை மாண்புசால்
தொண்டை நாட்டிற் கண்டா ரனைவரும்
மெச்சிப் போற்றுங் கீர்த்திக் கணித்தாய்ப்
புதுவளங் காட்டும் புதுப்பேட் டெனுமூர்
செய்தவ மோருரு வெய்திவந் தாங்கு
திருமால் பக்தியிற் றிறம்பா வுள்ளமும்
கல்வியு மொழுக்கமும் பல்வகை நலனும்
மல்கிச் சிறந்த மறையவர் குலத்து
மணிவிளக் கேபோல் மாண்புடன் றோன்றிக்
கண்டமிழ்‡ தென்னக் கற்போர்க் கினிதாந்
தண்டமிழ் போற்றுந் தகைமையு நேர்மையும்
நயத்தகு மேன்மையும் வியத்தகு புலமையும்
நந்தா வூக்கமு நலமுற வாய்ந்து

* "வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து;—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து; தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து"—ஔவையார் தனிப்பாடல்.

† "தொண்டைமண்டலசதக" நூலாசிரியர்.
‡ கண்டமிழ்து என்ன—கற்கண்டையும் அமிர்தத்தையும்போல.

செந்தமிழ்த் துறையிற் சங்கதம் பயிலும்
சீர்கா சப்போர் செம்மால்! வருக!!
தென்மொழி யோடு தெய்வப் பாஷையும்
நன்குணர்ந் தாய்ந்த நாவலிர்! வருக!!
சொன்னயம் பொருணய மன்னி யொளிர்தரும்
நன்னயப் பாக்கள் நவில்வீர்! வருக!!
மருந்துறழ் தங்க ளருந்தமிழ் மொழியைப்
போற்றிக் கல்லாப் போலிமா ணவர்க்கும்
அறிவினை யூட்டு மாற்றல்சா லந்தணிர்!
சென்னி நாட்டிற் பொன்னிக் கரைக்கண்
விளங்கா நிற்குமெம் ரீரங்கா டதனில்
'நற்றமிழ்ச் சங்கம்' நன்னர் நடாத்திச்
சிற்றறி வுடைய சிறியே மெமது
குற்றங் குறைகளைக் குறிக்கொளா தெம்மைப்
பற்றிய வகவிருள் பரிவொடு நீக்குதிர்.
எம்முறை வேண்டுகோட் கிணைந்தநுஞ் செயற்குக்
கைம்மா றியாதுங் கருதவுங் கில்லேம்.
*மாரிமாட் டுலகுதைகம் மாறென் னாற்றும்?
நானய நுகரும் நுண்மதிப் புலவீர்க்
கூக்கமு முயர்வு மாக்கைத் திண்மையும்
ஆக்கமு மாயுளு மேக்குற வோங்கவெம்
பிறைமதி சூடிய பெருந்தகை
இறைவன் றிருவடி யிறைஞ்சுவே மியாமே. (௩௧)

[ஷை சங்கத்தின், ஷை ஸ்ரீத் தக் கூட்டத்தில் ஷை ஸ்ரீநிவாஸா யர் அவர்கள் நாலடியாரிலுள்ள பல நயங்களை விளக்கி ஓர் ப பிரசங்கம் செய்ததனைத் தாம்வியந்து பாடியது:—]

*"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்றாற்றுங் கொல்லோ வுலகு" —திருக்குறள்.

## நேரிசை வெண்பா.

32. நாலடி நானூன் நயம்பல வாய்ந்தவற்றைச்*
சாலத் தெளிவுபெறச் சாற்றினன்—வேலையுற்
றமிழ்தி னாக்க முணர்ந்த வாசார்யன்
நற்றமிழ்ச் சங்கத்தில் நன்கு.

*ஆய்ந்து அவற்றை எனத் தொடர்மொழியாகவும், வாய்ந்தவற்றை என ஒரு மொழியாகவுங் கொள்ளலாம். வேலை யுற்ற அமிழ்து—பாற்கடலில் தோன்றிய அமுதம்என்பது தொனி.(௩௨)

33. [1909-ஆம் ஆண்டில், தம்மூர்க்கு அணித்தாகிய கச்சைமங் கலம் என்ற ஊரில் அமைக்கப் பெற்றுள்ள 'இயற்றமிழ்ச் சங்கத்' திற்குத் தாம் வரவேண்டுமென்று அச்சங்கத்தார் அழைப்புக்கடிதம் அனுப்ப, தமக்கு நேர்ந்த பல அசௌகரியங்களால் ஆண்டுச் செல்ல இயலாதபொழுது, அச்சங்கவாழ்த்தாகத் தாம் வரைந்து விடுத்தது:—]

## அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

விச்சை*யின் விருத்தி யின்கண் விருப்புற் றாக்கங் காட்டுங்
கச்சைமங் கலத்து வேளிர் கருத்தொத்துக் காமேற் கொண்ட
இச்சையா னினிது கூட்டும் இயற்றமிழ்ச் சங்கங் கற்றோர்
மெச்சுமா றிசைபெற் றோங்கி மேக்குற வளர்க மாதோ.

*விச்சை-வித்தியா என்னும் வடசொல்லின் திரிபு இயற்றமிழ் இசைபெற்றோங்கி—என்றதொடர் தொனிப்பொருளும் பயக்கும் (௩௩)

[1909-ஆம் ஆண்டில், பிறர் தம்மைநோக்கி நகைபுரியுந் தோறும் தாமும் அவரைநோக்கி இளநகை புரியும் குழவியினது கள்ளங்கபடமில்லாத இயல்பினை வியந்து பாடியது:—]

### நேரிசை வெண்பா.

34. தாமரினமகவுஞ் சற்றுணர்ந்த மேலோரும்
தாமனைய ராவர் தகநோக்கின் — சேமகவும்
இன்முகங்கண் டின்புறுமாடம்; இவ்வுலகோ ரின்புறல்கண்
டின்புறுவர் கற்றோரு மீங்கு. (௩௪)

[1909—ஆம் ஆண்டில், தாம் பி. ஏ. பரீட்சையில், தேறிய போழ்து, தமக்கோராண்டு கணிதநூற் போதகாசிரியராய் இருந்தவரும், சென்னைப் பச்சையப்பன் கலாசாலையிற் கணிதநூற்றலைமைப் புலமை நடாத்துபவரும் ஆகிய ஸ்ரீமான் S. P. சிங்காரவேலு முதலியாரவர்களது கல்வித்திறத்தை வியந்து பாடியன:—]

### நேரிசை வெண்பா.

35. நண்ணுணர் வோடு *நவலுந் திறம்பலவும்
எண்ணரிய நூற்பயிற்சி யென்பதூஉம் — தண்ணளியும்
†மன்னமலர் வண்டுகள்போன் மாணவர்கள் நாளுமுனைத்
துன்னுதலு மோர்வியப்போ சொல்.

* நவலும் திறம்பலவும்—(பாடம்) சொல்லும் ஆற்றல்பலவும் என்றும், (ஆசிரியராவார்க்கு உரிய வென்று) சொல்லப்படும் பல் வகைத் திறனும்என்றும், இருபொருள் பயக்கும். † மன்ன-மன்னுதலால்; செயவெனெச்சம் காரணப்பொருளது. (௩௫)

### நேரிசை வெண்பா.

36. கலைமகட்கோர் கண்ணுங்* கணிதநூற் றேர்ச்சிக்கு
இலையுன்னின் மிக்காரிங் கென்னின் — அலகில்புகழ்ச்
சிங்கார வேலவ!நின் சீர்விதந்து செப்புதற்கு
இங்கா ருரியர் இனி.

எண்ணைக்கலைமகட்கு ஓர் கண்ணெனவே, எழுத்தைமற்றொரு கண்ணெனக் கொள்க. (௩௬)

[1909—ஆம் ஆண்டில், தமது மாணாக்கர்கள் தமிழ் வியாசம் செவ்வனே வரைதற்கு, சென்னையினின்று வெளிவரும் 'நல்லாசிரியன்' பத்திரிகை பெரிதும் உதவி செய்யும் என்று தாம் கருதிய பொழுது பாடியது:—]

நேரிசை வெண்பா.

37. செய்ய தமிழ்ச்சிறுவர் தேர்ந்துவியா சம்வரைவான்
செய்யு முயற்சி சிறக்குமால் — ஐயமுதற்*
பல்லா சிரிதருமால், பல்லா சிரியர்க்கீர்
நல்லா சிரியனல் நன்று

*ஐயம் முதலிய (பல் ஆசு இரிதரும்) பல குற்றங்களும் நீங்கும்; ஆல்—இரண்டிடத்தும் அசை. (௩௭)

[இக்காலத்து உத்தியோகத்தில் அமர்ந்திருப்பவர்களிற் சிலர், தம்மின் மேலதிகாரிகளைக் கண்டால் அகம் மிகநடுங்கி அவர்களை முகஸ்துதி செய்வதையும், தம்மின் கீழ்த்தர வேலையிலுள்ளாரைப் பலவிதத்திலும் இடர்ப்படுத்துவதையும், ஆங்காங்குக் கண்ணுற்ற தாம், 1909—ஆம் ஆண்டில், இவ் விஷயத்தைக் குறித்துப் பாடியது:—]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

38. மேலதி காரி யென்னின் மெய்ந்நடுக் குற்றன் னோரைச்
சாலவுந் துதிப்ப ரன்னோர் தயையினை நாடி நிற்பர்
சீலமென் பதனை யோரார் சிறியவே லையிலுள் ளாரைக்
காலனார் தூதர் போலக் கடிவர்சில் பேதைமாந்தர் (௩௮)

[1909—ஆம் ஆண்டில் தாம், சென்னைக் கிறிஸ்தவக் கலாசாலையில் தமிழ்த் தலைமைப் புலமை நடாத்திச் சிறந்து விளங்கிய ப்ரஹ்மஸ்ரீ வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியாரவர்கள் B. A. 1903-ஆம் ஆண்டில் காலஞ்சென்றது முதல், அவரது இயற்றமிழ் மாணவர்கள் ஊக்கம் குன்றி, மனந்தளர்ந்து, இற்பதைக் குறித்துப் பாடியது:—]

நேரிசை வெண்பா.

39. சீருயருஞ் செந்தமிழ்வான் சேர்ந்துபுகழ் சான்றொளிரும்
சூரியநா ராயணப்பேர்த் தோன்றல்!இப்—பாரினின்று
நீயகல நின்மாட்டு நேயமிகு மாணவர்சீர்
வீயநின்றார் தம்முயற்சி விட்டு (நக)

[1909—ஆம் ஆண்டில், தாம் திருவள்ளுவநாயனார் அருளிச்செய்த திருக்குறள் என்னும் அரிய நீதி நூலின்கண்ணுள்ள பொருள் வளத்தைக் குறித்து வியந்து பாடியது:—]

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

40. சொல்லரு நயங்க ளார்ந்த தொல்கலைத் தருவி னுற்ற
மெல்லியன் முகையே யாக மேதகு மலர்தா னாக
நல்லியற் கனியே யாக நாடுவ தெதுவென் றாலும்
ஒல்லையிற்*பயப்பதாகும்உயர்திருக்குறளெனும்நூல்.(சய)

கற்போரது தரத்துக்கேற்ப திருக்குறள் என்னும்நூல், கலைத் தருவின் முகையாகவும் மலராகவும், கனியாகவும் அமையும் எனக் கொள்க. *ஒல்லையில்— விரைவில். உயர்குறள்—தொடைமுரண்.

தனிப்பாநாற்பது முற்றிற்று.

---